31st August 1961]

*Financial Aid to T.B. Patients*

*1566 *Q.*—SRI S. M. ANNAMALAI : கனம் ரெவின்யூ அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) காச நோயாளிகளுக்காக சர்க்கார் உதவிப் பணம் தருகிறார்களா ?

(இ) அப்படியானால், அதன் விவரமென்ன ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (அ) Yes, Sir.

(இ) copy[a] of the orders issued in the matter is placed on the table of the House.

SRI S. M. ANNAMALAI : இந்த அறிக்கையில் எவ்வளவு பணம் தரப்படுகிறது என்று சொல்லப்படவில்லை. இந்த பவனகர் பண்டிலிருந்து கொடுக்கப்படும் பணம் எவ்வளவு அதிகபட்சம், எவ்வளவு குறைந்தபட்சம் கொடுக்கப்படும் என்று அறியமுடியுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இந்த நிதியிலிருந்து 4 ஆயிரம் ரூபாய் வட்டி வருகிறது. இதைத்தான் விநியோகிக்கிறோம். இது இல்லாமல் இப்போது டிஸ்கிரிஷனரி கிராண்ட் 50 ஆயிரம் ரூபாய் இதற்கு ஒதுக்கப் பட்டிருக்கிறது. அதிலிருந்து கொடுக்கிறோம். மருத்துவ இலாக்கா தலைவரிடம் அப்ளிகேஷன் அனுப்பினால் அந்தந்த அப்ளிகன்ட் நிலையையும் அந்தஸ்தையும் அனுசரித்து நடவடிக்கை எடுக்கப்படும்.

*Assignment of House-sites for Homeless Poor*

*1567 *Q.*—SRI N. R. THIAGARAJAN : கனம் ரெவின்யூ அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

மதுரை ஜில்லா, பெரியகுளம் தாலூக்கா, பழனிச்செட்டி பட்டியில் உள்ள வீடில்லாத ஏழைகளுக்கு இடம் ஜாரி செய்யக் கோரும் மனு 1958-ம் ஆண்டு ஜூலை மாதம் 12உ ஜில்லா கலெக்டரிடம் கொடுத்ததின் மீது என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது ?

THE HON. SRI M. A. MANICKAVELU : The Collector of Madurai has reported that no such petition was received in his office.

*Unemployed Agriculturists*

*1568 *Q.*—SRI S. M. ANNAMALAI : கனம் முதல் அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) வடாற்காடு மாவட்டம், துரிஞ்சாபுரம் சமுதாய நலத் திட்டப் பகுதியில் வேலை யற்ற விவசாயத் தொழிலாளர்களுக்கு வேலை தரும் மாதிரித் திட்டம் ஆரம்பிக்கப்பட்டுள்ளதா ?

(இ) அப்படியாயின், அதன் விவரமென்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (அ) Yes, Sir.

(இ) A paper on the Pilot Scheme for the utilisation of idle manpower in rural areas was placed on the Table of the House on 30th March 1961 in reply to Legislative Assembly Question No. 1210 (1361) (Starred) by Sri N. K. Palaniswami, M.L.A.

---

[a] Printed as Appendix V on pages 535–537 infra,